உ

சிவமயம்.

# சைவாநுஷ்டான விதி.

1913

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசன்னதி
அவர்கள் ஆக்ஞையின்படி

சிதம்பரம் பெரியமடம்

ஸ்ரீ சா. முத்துவேல் தேசிகர் அவர்களால்

தொகுக்கப்பெற்று

சீர்காழி
ஸ்ரீ அம்பாள் பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

1941.

உ

சிவமயம்

# சைவாநுஷ்டானக் கிரியையின் விஷய

# அட்டவணை



*இந்த மூன்றும் ஸகளீகரணம் எனப்படும். ஸகளீகரணம் ஸகளனாகச் செய்தல். சகளன்—கலையோடு கூடினவன். கரணம்—செய்தல். எனவே சிவஸ்வரூபத்தை உண்டாக்கிக்கொள்ளுதல் என்று தாத்பரியம்.



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

௨௪-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ சண்முக தேசிக பரமாசார்ய சுவாமிகள்

உ

சிவமயம்

# முகவுரை

ஆன்மாக்களுக்கு மானுடப்பிறவி கிடைப்பது அரிது; அதினும் வைதிக சைவம் வழங்கும் தேசத்தில் அப்பிறவி கிடைப்பது மிக அரிது. அதினும் ஆகமோக்த சித்தாந்த சுத்த சைவராய்ப் பிறப்பது அரிதினும் அரிது. இச்சரீரம் நமக்குக் கிடைத்தது சைவசமயத்தை அநுட்டித்து முத்தி யின்பம் பெறும் பொருட்டேயாம்.

சைவ சமயம் என்பது சிவபெருமானை வழிபடும் மார்க்கம். அம்மார்க்கத்தை விரிவாக அறிவிக்கும் சிறப்பு நூல் சிவாகமம். சிவபெருமானை வழிபடுதற்கு யோக்கியதையைத் தருவது சிவாகமத்தில் விதித்த சிவதீக்ஷை.

சிவசின்னங்கள் விபூதி, ருத்ராக்ஷம் என்பன. சிவபெருமானுடைய மூலமந்திரம் ஸ்ரீபஞ்சாக்ஷரம். சிவபெருமானை மிகவும் மகிழ்விக்கும் தோத்திரங்கள் தேவார திருவாசகங்கள் ஆகும்.

மந்திரத்தோடு விபூதியை நெற்றியில் திரிபுண்டரமாகத் தரிப்பவர்களுக்கு முற்பிறப்பில் செய்தபாவங்கள் ஒழியும். நித்தியகர்மத்துள் அகமர்ஷணக் கிரியையினல் இப்பிறப்பில் செய்த பாவங்கள் ஒழியும்.

சிவபெருமான், சிவ சின்னங்களைத் தரித்துப் பிரதிதினமும் நித்திய கர்மத்தை அநுட்டித்து வருபவர்களுடைய தேகத்தைப் பரிசுத்தமாக்கித் தமது சத்தியாரோடு நித்தமும்

நீங்காமல் அவர்களுடைய முகத்தில் திருநடனம் புரிந்து, எவ்வித சஞ்சலமும் வாராமற்காத்துக் கடைசியில் அவர்களை மோக்ஷ சாம்ராஜ்யத்துக்கு ஆளாக்குவார் என்பது திண்ணம்.

ஆகையினால் சைவமரபிற் பிறந்தார்யாவரும் ஏழாம் வயதிலாவது ஒன்பதாம் வயதிலாவது சிவதீக்ஷை பெற்றுக் காலந்தவறாது விதிப்படி விடாமல் ஆயுள் பரியந்தம் சைவாநுஷ்டானத்தைப் புரிந்து வருதல் வேண்டும்.

தினந்தோறும் சூரியன் உதிக்க 5 நாழிகைக்கு முன்னாவது, $2\frac{1}{2}$ நாழிகைக்கு முன்னாவது, $1\frac{3}{4}$ நாழிகைக்கு முன்னாவது நித்திரை விட்டெழுந்து கிழக்கு முகமேனும் வடக்கு முகமேனும் இருந்து சிவ சிவ என்று நெற்றியில் விபூதிதரித்துச் சிவபெருமானைத் தியானித்து மூலமந்திரத்தைப் பத்துதரம் ஜபிக்க வேண்டும்.

அதன் பின் வெளியே சென்று மலசலங்கழித்துச் சௌசம் பண்ணித் தந்தசுத்திசெய்து, ஸ்நானம் பண்ணி, உலர்ந்த வஸ்திரம் தரித்து, நெற்றியில் விபூதியை உத்தூளனமாக அணிந்து, அநுட்டானபாத்திரத்தை அஸ்திரமந்திரத்தினால் சுத்திசெய்து, ஹிருதய மந்திரத்தினால் ஜலம் பூரித்துச் சுத்தமான இடத்தில் கொஞ்சம் ஜலம் விட்டு, அதன் மேல் ஜலபாத்திரத்தை வைத்துக் காலையில் கிழக்கு முகமாகவும், மாலையில் வடக்கு முகமாகவும் ஆசனத்திலிருந்து அநுட்டானம் செய்யவேண்டும்.

வியாதியினால் ஸ்நானம் செய்யமுடியாதவர்கள் கைகால்களைச் சுத்தம் செய்து ஈரவஸ்திரத்தினால் உடம்பெங்கும் துடைத்து, உலர்ந்த வஸ்திரம் தரித்து, ஆசமனம் செய்து கொண்டு அநுட்டானம் பண்ணல் வேண்டும்.

அதனையும் செய்ய முடியாதவர்கள் நெற்றியில் விபூதியிட்டுச் சிவபெருமானைத் தியானித்து, மூலமந்திரத்தை மனதிலே சிந்திக்கவேண்டும்.

வீட்டுக்கு விலக்காயுள்ள பெண்கள் மூன்று நாளும் மூலமந்திரத்தை மனதிலே சிந்தித்துக் கொண்டுவந்து நான்காம் நாள் ஸ்நானம் செய்து அநுட்டானம் செய்ய வேண்டும்

காலையில் சூரிய உதயத்துக்கு முன்பும் மாலையில் சூரிய அஸ்தமனத்துக்கு முன்பும் அநுட்டானம் செய்யவேண்டும்.

அநுட்டானம் காலம் தவறிச் செய்தவர்கள் சம்ஹிதா மந்திரம் 11 ஐயும் ஒருதரம் ஜபிக்க வேண்டும். ஒருவேளை அநுட்டானம் செய்யத் தவறினவர்கள் சத்யோஜாத மந்திரத்தை நூறுதரம் ஜபிக்க வேண்டும். இரண்டொரு வாரம் அநுட்டானத்தை விட்டவர்கள் பஞ்சகவ்யம் சாப்பிட்டு அநுட்டானம்செய்யவேண்டும். பல மாதங்கள் வரை அநுஷ்டானஞ் செய்யாதிருந்தவர்கள் மறுபடியும் சிவதீக்ஷை பெற்று அநுட்டானம் பழகிவரல் வேண்டும்.

மேற்கூறிய அநுட்டான விதியைப்பற்றிச் சிவாகமங்களிலும் பத்ததிகளிலும் விரிவாகச் சொல்லியிருப்பதைச் சுருக்கிச் சைவாநுட்டான விதி என்று பலபுத்தகங்கள் வெளிவந்துள்ளன. அவற்றிற் சில புத்தகங்களில் ப்ரௌட நடையில் எழுதப்பட்டுச் சிறுவர்களுக்கு எளிதில் விளங்காமலிருப்பதாலும், சில புத்தகங்களில் மந்திரத்தையும் கிரியையையும் ஒருங்கே கலந்து எழுதியிருப்பதால் மந்திரத்தைக் கண்டறிவது சிறுவர்களுக்குப் பிரயாசையாயிருப்பதாலும் இப்புத்தகம் மந்திரம் வேறு கிரியை வேறாக எளிய நடையில் சுலபமாக அறிந்து கொள்ளும்படி பத்ததிகளுக்குச் சிறிதும் மாறுபாடின்றி எழுதப்பட்டிருப்பதால் சைவசமயிகள் அனைவரும் இதிற்கண்டவாறு அநுட்டித்து வந்து பேரின்ப நலங்களைப் பெற்றுய்வார்களாக.

இங்ஙனம்,

சா. முத்துவேலுதேசிகர்,

பெரியமடம், சிதம்பரம்

உ

கலாமந்த்ரா:

1. ஓம் நிவ்ருத்திகலாயை நம:
2. ஓம் ப்ரதிஷ்டா கலாயை நம:
3. ஓம் வித்யாகலாயை நம:
4. ஓம் ஶாந்திகலாயை நம:
5. ஓம் ஶாந்த்யதீதகலாயை நம:

ஆஸன மூர்த்தி மந்த்ரா:

1. ஓம் ஶிவாஸனாய நம:
2. ஓம் ஶிவமூர்த்தயே நம:

---

ஓம் வித்யா தேஹாய நம:

---



சிவமயம்

# சைவாநுஷ்டான விதி

மந்திரம் — கிரியை

## பூமிசுத்தி (பூமியைச் சுத்தமாக்குதல்)

ஓம் அஸ்திராய பட் என்று அநுஷ்டானம் செய்யும் இடத்தை ஜலத்தால் புரோக்ஷித்து

## கணபதி குருவந்தனம் (கணபதியையும் குருவையும் வணங்குதல்)

| மந்திரம் | கிரியை |
| --- | --- |
| ஓம் மஹாகணபதயே நம: | குட்டிக்கொண்டு |
| ஓம் சிவகுரவே நம: | கும்பிட்டு |

## ஜல சுத்தி (ஜலத்தைச் சுத்தமாக்குதல்)

| மந்திரம் | கிரியை |
| --- | --- |
| ஓம் சிவாய நம: | வலது மோதிரவிரலில் பெருவிரலைச் சேர்த்து சுட்டுவிரல் நடுவிரல்களை நீட்டி வலது கண் இடது கண்களில் வைத்து |
| ஓம் சிவாய நம: | ஜலபாத்திரத்தில் ஜலத்தைப் பார்த்து (நிரீக்ஷணமும்) |
| ஓம் அஸ்திராய நம: | சுட்டுவிரலால் ஜலத்தை ஒருதரம புரோக்ஷித்து (தெளித்து) (புரோக்ஷணமும்) |
| ஓம் அஸ்திராய பட் | சுட்டுவிரலால் ஜல பாத்திரத்தை ஒருதரம் தட்டி (தாடனமும்) |

| | |
|---|---|
| ஓம் கவசாய வௌஷட் | வலது பெருவிரலை மடக்கி மற்ற விரல்களை நீட்டிக் கவிழ்த்து ஜலபாத்திரத்தை மூடி (அப்யுக்ஷணமும்) இது பதாகை முத்திரை |
| ஓம் அஸ்திராய பட் | இடது கையில் வலது கையால் 3 தரம் தட்டி (தாளத்திரயமும்) |
| ஓம் அஸ்திராய பட் | ஜல பாத்திரத்துக்கு 8-திக்கிலும் சொடித்து (திக்பந்தனமும்) |
| ஓம் கவசாய நம: | சுட்டு விரலால் வளைத்து (அவகுண்டனமும்) செய்து |
| ஓம் சிவாய வௌஷட் | தேனு முத்திரை கொடுத்து (2கையின் விரல்களைச்சேர்த்துக் கோத்து வலது சுண்டுவிரலோடு இடது மோதிரவிரலையும் இடதுசுண்டு விரலோடு வலதுமோதிரவிரலையும், வலது நடுவிரலோடு இடது சுட்டு விரலையும், இடது நடு விரலோடு வலது சுட்டு விரலையும் சேர்ப்பது) தேனுமுத்திரை. |
| ஓம் கவசாய நம: | ஜல பாத்திரத்தை மூடி ஈசாநம் முதலிய 11 மந்திரம் சொல்லி (ஜபித்து) |

அஸ்திர சந்தியோ பாசனம் (அஸ்திர சந்தியா தேவியை வழிபடுதல்)

| | |
|---|---|
| ஓம் அஸ்திராய நம: | நடு 3 விரலாலும் ஜலத்தை 3 தரம் சிரசில் புரோக்ஷித்து |
| ஓம் அஸ்திராய ஸ்வாஹா | ஜலத்தால் 3 தரம் தர்ப்பணம் செய்து |
| ஓம் அஸ்திராய நம: | 10 தரம் ஜபித்து |
| ஓம் அஸ்திராய ஸ்வாஹா | மறுபடியும் ஒருதரம் தர்ப்பணம் செய்து |

## ஆசமனம் (ஜலத்தை உட்கொள்ளல்)

ஓம் ஆத்மதத்வாய ஸ்வதா
ஓம் வித்யாதத்வாய ஸ்வதா
ஓம் சிவதத்வாய ஸ்வதா } உள்ளங்கையில் உளுந்து முழு கும் ஜலம் எடுத்து 3 தரம் ஆசமனம் செய்து

ஓம் அஸ்திராய பட் — இரண்டு உதடுகளைப் பெருவிரல் அடியாலும் மேலவாயை உள்ளங்கையாலும் துடைத்து

ஓம் கவசாய நம: — கை அலம்பவும்.

## அங்க ஸ்பர்சம் (சரீரத்தைத்தொடுதல்) இது தொடுமிடம் எனப்படும்

ஓம் ஹிருதயாய நம: — மோதிரவிரலில் பெருவிரலைச்சேர்த்து மேலவாய்; வலது மூக்கு இடது மூக்கு, வலதுகண், இடதுகண், வலது காது, இடது காது, தொப்புள், மார்பு, வலது தோள், இடது தோள், சிரசு இந்த 12 இடங்களையும் தொடவும்.

## கரசுத்தி (கையைச் சுத்தம் செய்தல்)

ஓம் அஸ்திராய பட் — வலதுகையில் இடதுகையால் ஒரு தரமும், இடது கையில் வலது கையால் இரண்டுதரமும் மேலும் கீழுமாகத் துடைத்து

ஓம் சிவாய நம: — கும்பிடவும்.

## விபூதி சுத்தி (விபூதியைச் சுத்தம் செய்தல்)

ஓம் அஸ்திராய நம: — இடதுகையில் விபூதியை வைத்து மோதிர விரலால் ஜலத்தைப் புரோக்ஷித்து

ஓம் அஸ்திராய பட் — மோதிர விரலால் கொஞ்சம் விபூதியை எடுத்து ராக்ஷதர் வராமலிருக்கும் பொருட்டு நிருதி மூலையில் போட்டு

ஓம் சிவாய நம: — விபூதியைப் பார்த்து (நிரீக்ஷணமும்)

ஓம் அஸ்திராய நம: — மோதிரவிரலால் ஜலத்தைத் தெளித்து (புரோக்ஷணமும்)

ஓம் அஸ்திராய பட் — சுட்டுவிரலால் தட்டி (தாடனமும்)

ஓம் கவசாய வௌஷட் — விபூதியை மூடி (அப்யுக்ஷணமும்) செய்து

ஓம் நிவிருத்தி கலாயை நம: என்பது முதலிய 5 கலாமந்திரங்களாலும்

ஓம் ஈசாநமூர்த்தாய நம: என்பது முதலிய 11 மந்திரங்களாலும் ஜபித்து.

## விபூதி ஸ்நானம் (விபூதியால் ஆகிய ஸ்நானம்)

ஓம் அஸ்திராய நம: — மோதிரவிரலால் கொஞ்சம் விபூதியை எடுத்துச் சிரசு முதல் பாதம் வரையில் போட்டு (விபூதியால் ஸ்நானம் ஆனதாகப் பாவித்து)

ஓம் ஹ்ருதயாய வௌஷட் — ஜலம் விட்டு

ஓம் கவசாய நம: — விபூதியைக் குழைத்து

ஓம் ஈசாநமூர்த்தாய நம: — சிரசில் 3 தரம்

ஓம் தத்புருஷவக்த்ராய நம: §நெற்றியில் 3 தரம்

ஓம் அகோரஹ்ருதயாய நம: மார்பில் 3 தரம்

---

§நெற்றி, மார்பு, தோள்களில் 6-அங்குலமும் மற்ற இடங்களில் ஒரு அங்குலம் நீளமும் கழுத்து பூராவும் ஒரு அங்குல இடைவெளியும் விட்டு தரிக்கவேண்டும்.

ஓம் வாமதேவகுஹ்யாயநம: தொப்புளில் ஒருதரம்

ஓம் சத்யோஜாத மூர்த்தயே நம: } வலது முழங்கால், இடது முழங்கால், வலது தோள், இடது தோள், வலது முழங்கை, இடது முழங்கை, வலது மணிக்கட்டு, இடது மணிக்கட்டு, வலது விலா, இடது விலா, முதுகு கழுத்து, இந்த §16 இடங்களிலும் விபூதிதரித்து கையலம்பி ஜலத்துடன் கும்ப முத்திரையாகப் பிடித்து

## மந்திர ஸ்நானம் (மந்திரத்தாலாகிய ஸ்நானம்)

| | |
|---|---|
| ஓம் சிவாய ஸ்வாஹா | ஈசானம்முதலிய 5மந்திரம்சொல்லி சிரசில் ஒருதரம் புரோக்ஷித்து |
| ஓம் அஸ்திராய பட் | 3 தரம் கையைத் தட்டி |
| ஓம் கவசாய நம: | கை அலம்பி |
| ஓம் ஹிருதயாய நம: | கீழே சிந்திய விபூதியை, ஹிருதயத்தில் சேர்த்து |
| | ஆசமனம் செய்து தொடுமிடம் தொட்டு |
| ஓம் அஸ்திராய பட் | வலதுகை இடதுகைகளை மேலும் கீழுமாக முன்போல் துடைத்து |
| ஓம் சக்தயே வெளஷட் | கும்பிட்டு |

## கரநியாசம் கையில் (நியாசம் செய்தல்) நியாசம்—பதித்தல்

ஓம் சிவாஸநாய நம:
ஓம் சிவமூர்த்தயே நம: } இரண்டு கைகளையும் விரித்துச் சேர்த்து இரண்டு உள்ளங்கைகளில் இரண்டு பெருவிரல்களாலும் நியாசம் செய்து

---

§ விலாப்புறம் இரண்டையும் நீக்கிக் காதுகள் இரண்டையும் கொள்வாருமுண்டு. முழங்கைகளையும் மணிக்கட்டுகளையும் நீக்கி 12 இடங்கள் கொள்வாருமுண்டு.

## பிராணயாமம் (பிராணவாயுவை அடக்குதல்)

வலது சுட்டுவிரல் நடுவிரல் இரண்டையும் உள்ளே மடக்கி பெருவிரலால் வலது மூக்கை மூடி

ஓம் ஈசாநமூர்த்தாய நம: என்பது முதலிய 11 மந்திரம் சொல்லி இடது மூக்கினால் வாயுவை உள்ளே இழுத்து (பூரகம்) செய்து

மோதிர விரலால் இடது மூக்கையும் மூடி 11 மந்திரம் சொல்லி வாயுவை உள்ளே நிறுத்தி (கும்பகம்) செய்து

பெருவிரலை எடுத்து விட்டு 11 மந்திரம் சொல்லி வாயுவை வெளியே விட்டு (ரேசகம்) செய்து

ஓம் சிவாயநம: வலது காதை மூடவும்.

## சிவதீர்த்தகரணம் (சிவதீர்த்தமாகச் செய்தல்)

ஓம் ஹிருதயாயவௌஷட் புருவமத்தியிலிருக்கும் அமிர்தத்தை வலது சுட்டு விரலை வளைத்து (அங்குச) முத்திரையால் கொண்டு வந்து ஜலத்தில் வைத்து அதை சிவதீர்த்தமாகப் பாவித்துக் கையால் மூடி

ஓம் சிவாயநம: 10 தரம் ஜபித்து தாளத்திரயம் திக்பந்தனம் அவகுண்டனம் செய்து தேனுமுத்திரை கொடுத்து

## சந்தியாதியானம் (சந்தியாதேவியை தியானித்தல்)

காலையில் பிராமி (சரஸ்வதி) தேவியையும் மாலையில் ரௌத்திரீ (பார்வதி) தேவியையும் தியானம்செய்து

### பிராமீதியானம்—சுலோகம்

ரக்த பூஷாம்பராம் ரக்தாம் ஜடாயக்ஞோபவீதி நீம் |
ஹம்ஸபத்மாஸ நாம் பாலாம் சதுர்வக்த்ராம் சதுர்புஜாம்||
ஸ்ருகக்ஷமாலிநீம் தெக்ஷே வாமே தண்டகமண்டலும் |
ப்ராஹ்மீ மஷ்டத்ருசம் த்யாயேத் ப்ராதஸ்தாரகிதேம்பரே||

ப்ராமியை, சிவந்த ஆபரணமும் சிவந்த புடைவையும் சிவந்த நிறமும் சடையும் பூணூலுமுடையவளாய் அன்னவாகனத்தின் மீது பத்மாஸனத்தைப் பொருந்தியிருப்பவளாய் இளம்பருவமும் நான்கு முகங்களும் எட்டுக் கண்களும் நான்கு கைகளும், வலக்கைகளிரண்டிலும் சிருக்கும் ருத்ராக்ஷமாலையும் இடக்கைகளிரண்டிலும் தண்டும் கமண்டலமும் உடையவளாய் காலையில் ஆகாயத்தில் நக்ஷத்திரமிருக்கும் போது தியானிக்க.

## ரௌத்ரீதியானம்—ஶ்லோகம்

நீலோத்பல தளாபாஸாம் கிஞ்சிச்சலிதயௌவ நாம் |
சதுர்புஜாம் த்ரிணேத்ராஞ்ச ஜடாகண்டேந்து மண்டிதாம்|
த்ரிசூலாக்ஷதராம் தேவீம் வாமே ஸாபயசக்திகாம் |
ரௌத்ரீம் த்யாயேத்வ்ருஷாப்ஜஸ்தாம்காலேர்த்தாஸ்தமிதாருணே||

ரௌத்ரியை, நீல நிறமும் சற்றேயௌவனம் திரும்பிய பருவமும் ஒரு முகமும் மூன்று கண்களும் நான்கு கைகளும் இளம்பிறையையுடைய சடையும் வலக்கைகளிரண்டிலும் சூலமும் ருத்ராக்ஷமாலையும் இடக்கைகளிரண்டிலும் அபயமும் சக்தியும் உடையவளாய் ரிஷப வாகனத்தின் மீது பத்மாஸனத்தைப் பொருந்தியிருப்பவளாய், மாலையில் சூரியன் பாதி மறைந்திருக்கும் காலத்தில் தியானிக்க.

## மந்திராபிஷேகம் (மந்திரத்தாலாகிய அபிஷேகம்)

வலக்கையிலுள்ள ஜலத்தை எடுத்து
கும்பமுத்திரையாகப் பிடித்து 11
மந்திரம் சொல்லி (ஜபித்து)

ஓம் சிவாயவௌஷட் — சிரசில் புரோக்ஷிக்கவும்.

## மார்ஜனம் (சுத்திசெய்தல்)

வலது கையால் ஜலத்தை மூடி 11
மந்திரம் சொல்லி (ஜபித்து) வலது
கையால் ஜலத்தை எடுத்து

| | |
|---|---|
| ஓம் ஹிருதயாயவௌஷட் | இடது கையில் விட்டு கீழே சிந்தும் ஜலத்தை |
| ஓம் ஈசானமூர்த்தாயவௌஷட் என்பது முதலிய 11 மந்திரத்தாலும் | சிரசில் ப்ரோக்ஷித்து. |

## அகமர்ஷணம் (பாவத்தைப் போக்குதல்)

| | |
|---|---|
| | பாக்கி ஜலத்தை வலது கையில் வாங்கி மூக்குக்குச் சமீபத்தில் பிடித்துக் கொண்டு அந்த ஜலத்தை வெண்ணிறமுடையதாகவும் தர்ம வடிவமாகவும் பாவித்து இடது மூக்கின்வழியே உள்ளே சென்று அங்குள்ள பாவத்தை அழித்ததாகவும் அந்தப்பாவம் மைக்குழம்பு போல வலது மூக்கின் வழியாய் வெளியே கையில் வந்ததாகவும் பாவித்து அதைத் தனக்கு எதிரில் அக்கினிபோல் ஜ்வலிக்கும் வஜ்ரக் கல்லில் |
| ஓம் அஸ்திராயஹூம்பட் | புருவ முரிப்புடன் விட்டு அந்தப் பாவம் எரிந்து சாம்பலானதாகப் பாவித்து |
| ஓம் அஸ்திராயபட் | ஜலத்தால் அதை அணைத்து |
| ஓம் கவசாயநம: | கை அலம்பவும் |
| | ஆசமனம் தொடுமிடம் காசுத்தி கரநியாசம் அங்கநியாசம்செய்து |

## கவசவேஷ்டனம் (கவசமந்திரத்தால் சுற்றுதல்)

| | |
|---|---|
| ஓம் கவசாயநம: | ஜலத்தால் தன்னை வளைத்துக்கட்டி |

## தர்ப்பணம் (திருப்தி செய்தல்)

| | |
|---|---|
| *ஓம் சிவாயஸ்வாஹா* | *3 தரம் தர்ப்பணம் செய்து* |
| *ஓம் சிவாயநம:* | *10 தரம் ஜபித்து* |
| *ஓம் சிவாயஸ்வாஹா* | *ஒரு தரம் தர்ப்பணம் செய்து* |
| *ஓம் ஈசாநமூர்த்தாயஸ்வாஹா* | *என்பது முதலிய 11 மந்திரத்தாலும் தர்ப்பணம் செய்து* |
| *ஓம் கணபதயேஸ்வாஹா*<br>*ஓம் ஸ்கந்தாயஸ்வாஹா*<br>*ஓம் உமாதேவ்யைஸ்வாஹா*<br>*ஓம் சிவசூரியாயஸ்வாஹா* | *ஒவ்வொருதரம் தர்ப்பணஞ்செய்து* |
| | *ஆசமனம் தொடுமிடம் சரசுத்தி கரநியாசம் அங்கநியாசம்செய்து* |

## தீர்த்தோபஸம்ஹாரம் (தீர்த்தத்தை ஒடுக்குதல்)

| | |
|---|---|
| | *முன் புருவமத்தியிலிருந்து கொண்டு வந்துவைத்த அமிர்தத்தைச் சுட்டு விரலால் எடுத்து* |
| *ஓம் ஹிருதயாயவௌஷட்* | *புருவமத்தியில் ஒடுக்கவும்* |

## சூரியோபஸ்தானம் (சூரியனை வழிபடுதல்)

| | |
|---|---|
| | *வலதுகையில் ஜலம்எடுத்து* |
| *ஓம் சிவாயநம:* | *10 தரம் ஜபித்து* |
| *ஓம் சிவாயஸ்வாஹா* | *சூரியமண்டலத்தின் நடுவிலிருக்கும் சிவத்தினிடத்தில் அர்ப்பணம் செய்யவும் (எதிரில் விடவும்)* |

## ஜபம்

*முன்போல் குட்டிக்கொண்டு கும்பிட்டு பிராணாயாமம் கரசுத்தி கரநியாசம் அங்கநியாசம் செய்து* மூலமந்திரத்தை 108 *தரம் ஜபிக்கவும். (மூலமந்திரம் தமது ஆசானிடம் உபதேசமுறையில் தெரிந்துகொள்ளத்தக்கது.)*

## பிரதக்ஷிண நமஸ்காரம்.

| | |
|---|---|
| ஓம் இந்திராயநம: | கிழக்கிலும் |
| ஓம் அக்நயேநம: | தென்கிழக்கிலும் |
| ஓம் யமாயநம: | தெற்கிலும் |
| ஓம் நிருதயேநம: | தென்மேற்கிலும் |
| ஓம் வருணாயநம: | மேற்கிலும் |
| ஓம் வாயவேநம: | வடமேற்கிலும் |
| ஓம் குபேராயநம: | வடக்கிலும் |
| ஓம் ஈசானாயநம: | வடகிழக்கிலும் |
| | தியானித்து கும்பிட்டுக் கொண்டு 3 பிரதக்ஷிணஞ்செய்து |
| ஓம் உமாமஹேசுவராயநம: | 3 தரம் வடக்குமுகமாக*சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எழுந்து ஆசமனம் செய்து |

---

*புருஷர் அஷ்டாங்க நமஸ்காரமும் பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்யவேண்டும்

அஷ்டாங்க நமஸ்காரம்:—தலை, கைகளிரண்டு, செவிகளிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டவயவங்களும் நிலத்தில் பொருந்தும்படி வணங்குதல்

இது செய்யுமுறை:-பூமியிலே சிரசைவைத்து மார்பு பூமியிலே படும்படி வலக்கையை முன்னும் இடக்கையைப் பின்னும் நேரே நீட்டிப் பின் அம்முறையே மடக்கி வலப்புயமும் இடப்புயமும் பூமியிலே பொருந்தும்படி கைகளை அரையை நோக்கி நீட்டி வலக்காதை முன்னும் இடக்காதைப் பின்னும் பூமியிலே பொருந்தச் செய்தல் வேண்டும்.

பஞ்சாங்கநமஸ்காரம்: தலை, கைகளிரண்டு, முழந்தாள்களிரண்டு என்னும் ஐந்தவயவமும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதல்.

| | |
|---|---|
| ஓம் அஸ்திராயநம: | ஜபம் செய்த இடத்தில் ஜலத்தைத் தெளித்து அதைத்தொட்டு |
| ஓம் ஹிருதயாயநம: | ஹிருதயத்தில் ஒத்திக்கொள்ளவும். பாக்கி ஜலத்தை கால்படாத இடத்தில் விட்டுவிடவும். |

---

## ஸூர்ய நமஸ்காரம்.

ஸூரியபகவானைத் தியானித்துக்கொண்டு 3 பிரதக்ஷிணம் செய்து

ஓம் வைகர்த்தநாய நம:
ஓம் விவஸ்வதே நம:
ஓம் மார்த்தாண்டாய நம:
ஓம் பாஸ்கராய நம:
ஓம் ரவயே நம:
ஓம் லோகப்ரகாசாய நம:
ஓம் லோகஸாக்ஷிணே நம:
ஓம் த்ரிவிக்ரமாய நம:
ஓம் ஆதித்யாய நம:
ஓம் ஸூர்யாய நம:
ஓம் அம்சுமாலினே நம:
ஓம் திவாகராய நம:

இந்த 12 நாமங்களையும் சொல்லி 12 தரம் நமஸ்கரித்து எழுந்து களிங்கமுத்திரையினால் ஸூரியனை வலது கண்ணால்

தரிசனம் செய்து பிரார்த்தித்து வேண்டிய வரங்களைக் கேட்டுக் கொள்ளவும்.

கலிங்கமுத்திரையாவது :—

2 கைகளையும் விரித்து நடுவிரல் மோதிர விரல்களை மடக்கி இடது கையில் வலது கையைக் கவிழ்த்து வைத்து வலது நடுவிரல் மோதிரவிரலை நீட்டி இடது பெருவிரலாலும் இடது நடுவிரல் மோதிரவிரலை நீட்டி வலது பெருவிரலாலும் தாங்குவது.

---

சைவாநுஷ்டான விதி
முற்றிற்று.



PRINTED AT THE SRI AMBAL PRESS, SHIYALI.

குருபர்தம்.

# தருமபுர ஆதீனம்

## ஆதீன வெளியீடு புத்தகங்களின் விபர ஜாப்தா.

| நெ. | விபரம். | வெளியிடப்பட்ட வருஷம். |
|---|---|---|
| 1 | குருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு | 1924 |
| 2 | நித்திய கன்மநெறி | 1927 |
| 3 | திருமுல்லைவாயிற் புராணம் | 1927 |
| 4 | திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் | 1927 |
| 5 | சித்தாந்த நிச்சயம் | 1928 |
| 6 | சம்பிரதாய தீபம் | 1928 |
| 7 | வருணாஸ்ரம சந்திரிகை | 1930 |
| 8 | சிகாரத்தின மாலை | 1930 |
| 9 | திருப்பதிகமும் பஞ்சரத்தினமும் | 1930 |
| 10 | தசமணி மாலை | 1930 |
| 11 | ஞானசம்பந்த குருராய வட்டகமும், சந்திரகலா மாலையும் | 1930 |
| 12 | திருவையாற்றுப் புராணம் | 1930 |
| 13 | சிவானந்தபோதசாரம் | 1931 |
| 14 | சோடச கலாப்பிரசாத சட்கம் | 1931 |
| 15 | சைவசன்யாச பத்ததி | 1932 |
| 16 | சிவபோகசாரம் | 1932 |
| | ஷை இரண்டாம் பதிப்பு | 1936 |
| 17 | சிவப்பிரகாச கட்டளை | 1932 |
| | ஷை இரண்டாம் பதிப்பு | 1939 |

| | | |
|---|---|---|
| 18 | தோத்திரப்பாடற்றிரட்டு | 1933 |
| 19 | திருத்துருத்திப் புராணம் | 1933 |
| 20 | ஞானசரிதை | 1934 |
| 21 | முத்தி நிச்சயம் | 1934 |
| 22 | அறிவானந்த சமுத்திரம் | 1935 |
| 23 | பண்டாரமும்மணிக்கோவை | 1937 |
| 24 | இந்துமத பாலபாடம் | 1937 |
| 25 | சிதம்பர செய்யுட்கோவை | 1937 |
| 26 | திருவையாற்றுத்தலமகிமை சுருக்கம் | 1937 |
| 27 | கிளிவிடு தூது | 1938 |
| 28 | திருமுலைப்பால் சிறப்பு | 1939 |
| | ஷை இரண்டாம் பதிப்பு | 1941 |
| 29 | பதி பசு பாசத்தொகை | 1940 |
| 30 | சிவஞானதேசிகர் நான்மணிமாலை | 1940 |
| 31 | திருபுவனத்தலமகிமைச் சுருக்கம் | 1940 |
| 32 | கீர்த்தித்திருவகவல் — மாணிக்கவாசக சுவாமிகள் | 1941 |
| 33 | ஸ்ரீகுருஞான சம்பந்த சுவாமிகளின் வரலாறும் சில பாசுரங்களும் | 1941 |
| 34 | வைத்தீஸ்வரன் கோவில் தேவாரம் திருப்புகழ் | 1941 |
| 35 | திருத்தொண்டத்தொகையும் அசபாநடன பதிகமும் | 1941 |
| 36 | குங்கிலியக்கலய நாயனார் அன்பின்திறம் | 1941 |
| 37 | திருக்கடவூர் தேவாரம் திருப்புகழ் | 1941 |
| 38 | திருவையாற்றுத் தேவாரங்கள் | 1941 |
| 39 | புள்ளிருக்கு வேளூர்ப் புராணம் | 1941 |
| 40 | சித்தாந்த சைவ வினாவிடை | 1941 |

| | | |
|---|---|---|
| 41 | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1941 |
| 42 | ஆச்சாள்புரம் கோவில் வரலாறு | 1941 |
| 43 | திருவையாற்றுக்கோவில் வரலாறு | 1941 |
| 44 | ஸ்ரீசுப்பிரமணியர் திருவவதாரமும் கந்தர்கலி வெண்பாவும் | 1941 |
| 45 | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருமுறைத்திருநாள் | 1941 |
| 46 | சிவபூஜாவிதி | 1941 |
| 47 | சைவாநுஷ்டானவிதி | 1941 |

உ

குருபாதம்.

# தருமபுர ஆதீனம்.

## ஆதீன வெளியீடுகளின் விலைப்பட்டி.

---

| வெளியீடு நெ. | விபரம். | விலை. | தபால் செலவு |
|---|---|---|---|
| | | அ. ப. | அ. ப. |
| 39 | புள்ளிருக்குவேளூர்ப் புராணம் | 8—0 | 3—0 |
| 40 | சித்தாந்த சைவ வினாவிடை | 3—6 | 1—9 |
| 41 | நால்வர்சரித்திரமும், அற்புதத்தேவார திரட்டும் | 2—0 | 1—3 |
| 42 | ஆச்சாள்புரம் கோவில் வரலாறு | 1—6 | 0—9 |
| 43 | திருவையாற்றுக்கோவில்வரலாறு | 1—3 | 0—9 |